ம்பு முதலியவற்றிற்கு வேறாய ஆன்மா உண்டென்றுணர்ந்துழியும் ஐயநீங்குதல் உத்தியாற்பலசாற்பயிற்றலாகிய சிந்தனையாற் பெறற்பாலதாகலின், சிந்தனையைப் பிறப்பிப்பதாகிய பதார்த்தங்களினுண்மை தெரித்தலாற் சுருதியன்றிச் சாத்திரமும் முத்தியைப் பயப்பிப்பதேயாம். சிந்தனைசெய்தபின்னர்ச் சுருதியான் உபதேசிக்கப்படும் யோகவிதியால் தெளிதல் நிகழ்ந்துழி அதன்பின்னர் உடம்பு முதலியவற்றிற்கு வேறாய ஆன்மாவைப் புலப்படக் காணும். காணவே, உடம்பு முதலியவற்றை யானெனனுஞ் செருக்காகிய மயக்கவுணர்வு கெடும். கெடவே, குற்றமின்மையின், முயற்சியின்றாம். ஆகவே, அறம் பாவங்கள் நிகழாமையிற் பிறவி நீங்கும் பிறவி நீங்குழி, முன்னர்ச் செய்துகொண்ட அறம் பாவங்கள் அனுபவத்தானீங்கும். நீங்கவே, இறுதித் துன்பந்தினழிவுபாட்டை இலக்கணமாகவுடைய வீடுபேறுண்டாம். வீடுபேற்றிற்கேது ஞானமே. மயக்கவுணர்வு நீங்குதல் ஞானமாத்திரத்தாற் றென்றும், "ஞானத்தில் வீடென்றே" என ஏகாரத்தால் வினையேதுக்கள் அதுவல்லவென விலக்குதலின். அற்றேல், "சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திர மார்க்கந் தாதமார்க்கமென்று சங்கரனை யடையுநன்மார்க்க நான்கு" என வீடுபேற்றிற்கு நான்கு காரணமென்றலின், ஞானங் கருமமென்னும் இரண்டுங் கூடியே வீடுபேற்றிற்குக் காரணமாமெனின்;—அற்றன்று, ஈண்டுச் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்கத்தைக் கொடாவென்றும், "சரியை கிரியாயோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" என்றும், "கிரியையென மருவுமவையாவு ஞானங் கிடைத்தற்கு நிமித்தம்" என்றும், கருமமனைத்தும் ஞானத்திற்கு ஏதுவாகக் கூறுதலின், கருமமனைத்தும் ஞானம் வாயிலாக வீடுபேற்றிற்குக் காரணமாவதல்லது நேரே